20th September 1958]

SRI T. T. DANIEL : May I know from the Hon. Minister whether our Government have issued any instructions to the Collector of the Kanyakumari district to assist the Kerala Officers to collect this Maniamkaram from the Kanyakumari district. Also, may I know under what provisions of law, the Kerala Officers are extending their activities in our district and collecting taxes?

THE HON. SRI M. A. MANICKAVELU : I think, I should have notice for this question.

SRI A. VEDARATHNAM : "மணியங்கரம்" என்பது என்ன என்று புரியவில்லை. அதை விளக்கிக் கூறவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : பத்மநாபஸ்வாமி தேவஸ்தானத்துக்கு ரயத்துகள் கொடுக்கக்கூடிய "ரெண்ட்" அல்லது தீர்வைக்கு மணியங்கரம் என்று பெயர்.

SRI T. S. RAMASWAMY PILLAI : May I know whether the Government are aware of the fact that a Bill to abolish Moniamkaram was on the anvil on the eve of the reorganization of the State of Kerala. There was also a stay order prohibiting the collection of Maniamkaram from the ryots during 1954 or so by the Kerala Government?

THE HON. SRI M. A. MANICKAVELU : I cannot say anything about it from the information available here. But I take it that since the hon. Member had been in that State, probably it may be so.

SRI T. T. DANIEL : May I know from the Hon. Minister whether the Kerala Government have sent any letters to our Government as to how this Maniamkaram issue should be settled. Also, may I know whether any negotiation is being started between the top level officers of our Government and the Kerala Government to settle this issue?

THE HON. SRI M. A. MANICKAVELU : I would request the hon. Member to put a separate question.

## PRIVATE NOTICE QUESTION.

MR. SPEAKER : The hon. the Leader of the Opposition has given notice of a Private Notice question. Let him read the quesnow now. 10-10 a.m.

* *P.N.Q.* 2—SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the steps taken by the Government to ensure the reopening of the Kaleeswarar Mills, Coimbatore;

(*b*) whether the State Government have addressed the Central Government on this matter; and

(*c*) what are the proposals made by the Central Government for the re-opening of the said Mills?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*), (*b*) & (*c*) Consequent on the closure of the Kaleeswarar Mills, this Government addressed the Government of India that the mills may be taken over under the Industries Development and Regulation Act. The Government of India have enquired of this Government whether this Government could take over and run the mills as lessees from the management. This Government have pointed out the legal and practical difficulties in adopting such a course and have reiterated their original suggestion that action may be taken under the Industries Development and Regulation Act. This Government have also agreed to act as agent of the Government of India for managing the mills. The decision of the Government of India is awaited.

At the same time I desire to point out that all the arrears of wages for three months have been disbursed only a few days back. The administrators appointed by the High Court who raised funds for the payment of arrears are also trying to raise funds for running the mills. I am afraid that resort to Satyagraha and the like, may impede the attempts made from several directions to run the mills.

SRI K. ANBAZHAGAN : காளேஸ்வரா மில்லை தொழில் வளர்ச்சியைக் கருதியும் தொழிலாளர்களின் நலத்தைக் கருதியும் ஏற்று நடத்தலாம் என்ற கருத்தை மத்திய அரசாங்கத்திற்கு தெரிவித்திருப்பதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். சென்னை ராஜ்யமே இதனை பொறுப்பேற்றுக்கொண்டு நடத்துவதற்கு முன்வர முடியாதா? மத்திய அரசாங்கத்தின் ஏஜண்டாக இருந்துதான் நடத்தவேண்டுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : சட்டப்பிரச்னை இது. மத்திய அரசாங்கத்திற்குத் தான் இந்த அதிகாரம் இருக்கிறது. "இன்டஸ்டிரீஸ் டெவலெப்மெண்டு அன்ட் ரெகுலேஷன் ஆக்ட்" பிரகாரம் மத்திய சர்க்கார் தான் இதைச் செய்ய முடியும். ராஜ்ய சர்க்கார் செய்ய முடியாது.

SRI P. S. CHINNADURAI : மீண்டும் காளேஸ்வரா ஆலை திறக்கப் படும் வரையில் அங்கு வேலை செய்யும் சுமார் 2,600 தொழிலாளர்களுக்கு அரசாங்கத்தார் ஏதாவது பணம் கொடுத்து உதவுவதுபற்றி ஆலோசிக்குமா, அவர்களுடைய "பிராவிடண்டு பண்டு" அரசாங்கத்தின் கையில் இருக்கிற காரணத்தினாலே அதற்கு எதிராக "அட்வான்ஸ்" கொடுப்பது பற்றி அரசாங்கம் ஆலோசிப்பார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : இந்தப்பிரச்னை இன்றைக்கு அவசியமில்லை. இதற்கு முன்னால் அவர்களுக்கு சம்பளம் கொடுக்கப்படாத நேரத்தில் சர்க்கார் "பிராவிடண்டு டண்டு" பணத்தை கொடுக்கலாம் என்று யோசனை செய்து அதற்குவேண்டிய உத்தரவும் பெற்று வைத்திருந்தது. இப்பொழுது அவர்களுக்கு 3 மாதச் சம்பளம் கொடுக்கப்பட்டுவிட்டதால் இதற்கு அவசியமில்லை என்று சர்க்கார் நினைக்கிறார்கள்.

SRI M. KALYANASUNDARAM : இந்த மில்லை மத்திய சர்க்கார் எடுத்துக்கொண்டு, ராஜ்ய சர்க்கார் ஏஜண்டாக இருந்து நடத்த முடிவு செய்து முன்வந்திருப்பதால், உயர்நீதிமன்றத்தில் 22-ம் தேதி யன்று "லிக்விடேஷன் பெடிஷன்" விசாரணைக்கு வரக்கூடிய சமயத்தில்

20th September 1958]

நம்முடைய ராஜ்ய சர்க்காரின் யோசனைகள் அங்கு வைக்கப்பட்டு "லிக்விடேஷன்" இப்பொழுது செய்யவேண்டாம் என்று உயர்நீதி மன்றத்திடம் வற்புறுத்துவார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : இதை சர்க்கார் செய்ய முடியாது. பங்குதாரர்கள் எல்லோரும் சேர்ந்து அதை நடத்தவேண்டுமென்பதற்காக உயர்நீதி மன்றத்திற்கு அவர்கள் மனுக்கள் போட்டு, அட்மினிஸ்டிரேட்டர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இந்த "அட்மினிஸ்டிரேட்டர்கள்" இந்த மில்லை நடத்துவதற்காக முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள். ரூ. 5 லட்சம் கடன் வாங்கி பாக்கியிருக்கிற சம்பளத்தை கொடுத்தார்கள். மேற்கொண்டு கடன்வாங்கி இந்த மில்லை நடத்துவதற்கு முயற்சி செய்துகொண்டிருக்கிறார்கள். இந்த முயற்சிகளெல்லாம் எந்த நிலைமையில் இருக்கின்றன என்டதை பரிசீலனை செய்து உயர்நீதி மன்றம் முடிவு செய்யும். தொழிலாளர்கள் பிரதிநிதிகள் உயர்நீதி மன்றத்தில் தங்கள் வாதங்களைச் சொல்லிக் கொள்ளலாம்.

MR. SPEAKER : Questions are over.

## II.—ANNOUNCEMENTS BY THE HON. SPEAKER.

### BILL PASSED BY THE COUNCIL.

MR. SPEAKER : I have to announce that the Madras District Municipalities (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 27 of 1958) and the Madras City Municipal (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 28 of 1958) have been passed by the Legislative Council on the 18th September 1958 without any amendment.

## III.—CALLING ATTENTION TO THE RETRENCHMENT OF PEONS IN THE COMMERCIAL TAX DEPARTMENT.

MR. SPEAKER : The hon. Member, Sri K. Anbazhagan, has given notice of a motion under rule 40. He will please refer to it briefly.

* SRI K. ANBAZHAGAN : அவைத் தலைவர் அவர்களே, சென்னை அரசாங்கத்தினுடைய வணிக வரித் துறையிலுள்ள கடைநிலை ஊழியர்களாக இருந்த எறத்தாழ 240 ஊழியர்கள் இன்று திடீரென்று வேலையிலிருந்து நீக்கப்படுகின்ற ஒரு இக்கட்டான நிலைமை தோன்றியிருக்கிறது. கடந்த 1958-ம் வருஷம் ஆகஸ்ட்டுமீ 27ந் தேதியிட்ட அரசாங்க ஆணை 3153-இன் படி அவர்களுக்கு அளிக்கப்பட்ட ஒரு உத்தரவில் அவர்களெல்லாம் 1958-ம் வருஷம் அக்டோபர்மீ 1-ந்தேதியிலிருந்து வேலையிலிருந்து நீக்கப்படுவதாக அறிவிக்கப்பட்டிருக்கிறார்கள். வணிக வரித்துறையானது காமதேனு, கற்பக விருட்சமாக இருந்தபோதிலும், அதில் ஏற்கனவே கடைநிலை ஊழியர்களாக இருந்து துன்பப்பட்டுக்கொண்டிருந்தவர்கள் இப்பொழுது கடைத் தெருவில் நிற்கின்ற நிலைமைக்குத் திடீரென்று ஆளாக்கப்பட்டிருப்பது மிகுந்த வேதனை அளிப்பதாகும்.

இந்த 240 ஊழியர்களும் வேலையைவிட்டு நீக்கப்பட்டால், அவர்களைச் சார்ந்த குடும்பத்தினர்கள் ஏறத்தாழ 1,000 பேர்கள் அல்லலுற்று, வாழ்க்கை நடத்த முடியாமல் துன்பத்திற்கு ஆளாக்கப்படுவார்கள். வணிகவரி துறையைப் பொறுத்தவரையிலே டாக்டர் லோகநாதன் அவர்கள் சீர்திருத்தம் செய்யவேண்டுமென்று கூறிய ஒரு கருத்தின்படி இந்த நடவடிக்கை எடுக்கப்படுகிறது என்று ஒரு ஐயப்பாடு எற்பட்டிருக்கிறது. டாக்டர் லோகநாதன் அவர்கள் இப்படி கடைநிலை ஊழியர்களை வேலையைவிட்டு நீக்குவதால் பெரிய சீர்திருத்தத்தை எற்படுத்தலாம் என்ற கருத்தைத் தெரிவித்திருப்பதாக எனக்குப் புலப்படவில்லை. டாக்டர் லோகநாதன் அவர்கள் அப்படியே